*Nam nāṭu*

*Malar 1, ital 270 [i.e. 271]*

*April 27, 1954*

Record no. 1131

REGD. No. M. 6311

PHONE No: 55630

தனி இதழ்
ஒரு அணா
இலங்கையில் 10 சதம்

மலர் 1] [இதழ் 270

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்.. அண்ணாதுரை

"THE NAM NADU" A TAMIL DAILY : THE OFFICIAL ORGAN OF: THE D.P.F

சந்தா விபரம்
உள்நாடு (இலங்கை உட்பட)
ஆண்டு ரூ. 24—0—0
6 மாதம் ரூ. 12—0—0
3 மாதம் ரூ. 6—0—0
வெளிநாடு:
ஆண்டு ரூ. 30—0—0
6 மாதம் ரூ. 15—0—0
3 மாதம் ரூ. 7—8—0

சென்னை: சித்திரை 15உ செவ்வாய் (27—4—54) ★ ★ ★ வெளியீடு: சித்திரை 16உ புதன் (28—4—54)

# நேருவுக்கு நேயரின் புத்திமதி!

## புரியாத விஷயத்தைப் பற்றிப் பேசி பண்டித நேரு சிரமப்படுவானேன்?

### கழகங்களுக்கு மக்கள் ஆதரவு அமோகம்

"நேருஜி சமீபத்தில் சிதம்பரத்துக்கு வந்திருந்தபோது, திராவிட சமுகத் தலைவர்களின் போக்கை ஏளனமாகக் கண்டித்துப் பேசினார்.

'இத்தலைவர்களின் பேச்சுகளைப் பார்க்கும்போது, இவர்களெல்லாம் எப்படி பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு வெளியில் இருக்கிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை' என்று கூறிப் பரிகசித்தார்.

இந்த மாதிரி இவர், இவர்களை இழிவாகப் பேசியிருப்பது இது முதல்தடவையல்ல; முன்பு சென்னையில் பேசியபோது, 'முட்டாள்கள், விசித்திரமான அபத்தங்கள்' என்று லையாண்டி செய்தார்.

'முட்டாள்கள்' என்று நேரு குறிப்பிட்டபின், திராவிட கழகத்தினர் பெருங்கோபமும் ஆத்திரமுமடைந்து என்னென்னவோ செய்தார்கள். ஆத்திரத்தில் செய்த காரியங்கள் எப்படி எப்படியோ இருந்தன.

மீண்டும் இவர்களை நேரு கிளறிவிட்டிருக்கிறார்.

இப்படி இவர்களைப் பற்றி குறிப்பிட்டிருக்க வேண்டாம் என்பதே நம் கருத்து. காரணம், வேறு ஒன்றுமில்லை; தெரிந்தோ தெரியாமலோ, தமிழ் நாட்டில் இன்றைக்கு ஏராளமான பேர் இக்கழகங்களின் ஆதரவாளர்களாயிருக்கிறார்கள்.

இவர்களுடைய மனதை நேரு போன்றவர்கள் புண்படுத்தக் கூடாது.

துளியளவு உண்மையாவது இல்லாவிட்டால், இக்கழகங்கள் மக்களிடையே இவ்வளவு செல்வாக்கடைய முடியுமா?

ஆனால், அந்தத் துளியளவு உண்மை என்ன என்பதுதான் பிறருக்குப் புரிவதில்லை!

புரிந்து கொள்ள முடியாத விஷயத்தைப் பற்றி நேரு போன்றவர்கள் ஏன் இப்படி சிரமப்பட வேண்டும் என்பது தான் கவலை!'

—'ஹனுமான்' 25—4—54

## 'இந்தி பேசும் மாகாணங்கள் வகுப்புவாதத்தின் இருப்பிடங்கள்!'

— (:) —

## சமூகப்பொருளாதாரப்புரட்சி ஏற்படுமென எச்சரிக்கை

புதுடில்லி, ஏப். 24—

இந்தியச் சிக்கலை ஒரு வகுப்புவாதச் சிக்கலாக்க இந்தி மொழி ஆதரவாளர்கள் முயலுகின்றனர்; அதே நேரத்தில், 'இந்தி பேசும் மாகாணங்கள் எல்லாம், வகுப்பு வாதத்தின் இருப்பிடங்கள்' என்று கல்வித் துறையினர் கருதுகின்றனர்,"

—என்று, நிதி மசோதாவின் மீது, இந்திய மேல்சபையில் பேசுகையில், இந்திக் கவிஞரும், போர்சிரியருமான தின்கர் (பீகார்) குறிப்பிட்டார்.

இதுபற்றி அவர் விபரித்தபோது கோள் ஒன்றில் கூறியதாவது:—

"இந்தி ஆதரவாளர்களும், இந்தி பேசும் மாகாணங்களும், மத்திய கல்வித் துறையும் கட்டாயமின்றி மக்களின் ஒத்துழைப்புடன் இந்தி மொழியைப் பரப்பமுயலவேண்டும்."

பி. சி. கோஷ் என்ற உறுப்பினர் கூறியதாவது:—

"தேசிய வருமானத்தை அதிகரித்து, ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்தாலொழிய, இந்தியாவில் சமூகப் பொருளாதாரப் புரட்சி ஏற்படும்," என்றார்.

புதுடில்லி, ஏப். 24—

1953-ம் ஆண்டில், பம்பாய்த் துறைமுகத்துக்கு மொத்தம் 2,819 கப்பல்கள் வந்தன.

## தெலிங்கானா மாவட்டம் தனி மாநிலமாக வேண்டும்

— (:) —

### ஆந்திராவுடன் சேருவதற்கு எதிர்ப்பு

மாநில புனரமைப்புக் குழுவிடம் கோரிக்கை

ஐதராபாத், ஏப். 25—

ஐதராபாத்திலுள்ள 9 தெலிங்கானா மாவட்டங்களைத் தனி தெலிங்கானா மாநிலமாக்க வேண்டுமென்றும், இதற்கு ஐதராபாத்தும், செகந்தராபாத்தும் தலைநகர்களாய் இருக்கலாமென்றும் கோரி, செகந்தராபாத் நகரசபையைச் சேர்ந்த ஆறு உறுப்பினர்கள் மாநில புனரமைப்புக் குழுவிடம் ஒரு மனு சமர்ப்பித்திருக்கிறார்கள்.

ஐதராபாத், செகந்தராபாத் இரண்டின் பூகோள, சீதோஷ்ண நிலைமையைக் கருதி அவைகளை இந்தியாவின் உப-தலைநகராக்கலாம் என்றும் அவர்கள் யோசனை கூறியிருக்கிறார்கள்.

தெலிங்கானா மாவட்டங்களை ஆந்திராவுடன் சேர்த்துவிட வேண்டுமென்ற மெஜாரிடி கருத்தை இவர்கள் ஆட்சேபித்துள்ளனர்.

## 3-வது உலக யுத்தத்திற்கு விதையூன்றப்படுகிறது?

— (:) —

### இந்தோ-சீனாவை இழந்தால் ஆசிய நாடுகளையே இழக்க நேரிடுமாம்!

அமெரிக்க உதவித் தலைவர் கூற்று

லாஸ் எஞ்சல்ஸ், ஏப். 26—

"அமெரிக்க நிர்வாகத்தின் கொள்கை, இந்தோ—சீனாவிலோ அன்றி வேறெங்குமோ, போர் நிறுத்தப்பட்டு அப்பிரதேசங்கள், கம்யூனிஸ்டுகளின் வசமானால், ஆசியா முழுவதும் நம்மால் இழக்கப்பட்டு மூன்றும் உலக யுத்தத்திற்கு கொண்டு செல்வதாக இருக்கும்' என அமெரிக்க உதவி ஜனாதிபதி நிக்சன் எச்சரித்தார்.

ரிபப்ளிகன் கட்சி சார்பில் நடைபெற்ற பொதுக் கூட்டமொன்றில் பேசுகையில் அவர் மேலும் சொன்னார்:—

"அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவர், தம்மால் முடிந்தவரை, இந்தோ—சீனாவிலும், இன்ன பிற இடங்களிலும், அமெரிக்கத் துருப்புகள் தொடர்ந்து சண்டையிடுக் கொண்டிருக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறார்.

அமெரிக்க வெளிநாட்டுக் கொள்கை, இந்தோ—சீனா இழக்கப்படுவதைத் தடுக்காவிடின், "ஆசியா முழுவதையும் நாம் சிவப்பிற்கு இழந்து விடுவதாயும் அதன் மூலம் ஒரு மூன்றும் உலக மகா யுத்தத்திற்கு வழி கோலுவதாயும் இருக்கும்" என்று சொன்னார்.

### சர்க்கரை கட்டுப்பாடு?

இந்திய சர்க்கார் நிலைமை

புதுடில்லி, ஏப். 24—

சர்க்கரைக்கு மறுபடியும் கட்டுப்பாட்டைக் கொண்டு வர இந்திய சர்க்கார் உத்தேசிக்கவில்லையென்று தெரிய வருகிறது.

சமீப காலமாகச் சர்க்கரையின் விலை ஏறிவருவது கண்டு சர்க்கார் கவலை கொண்டிருக்கின்றனராயினும், அதற்குக் காரணம் சப்ளையிலுள்ள தட்டுப்பாடுதான் என்றும், இதை இறக்குமதியின் மூலம் சமாளித்துவிடலாமென்று அவர்கள் கருதுவதாகவும் தெரிகிறது. ஏற்கெனவே 3 லட்சம் டன் சர்க்கரையை இறக்குமதி செய்ய ஏற்பாடாகியுள்ளது. அவசியமாயின் மேற்கொண்டு 2 லட்சம் டன் வரவழைக்க ஏற்பாடு செய்யப்படுமாம்.

## ஷேக் அப்துல்லாவை விடுவிக்க ஜெயபிரகாஷ் நாராயண் கோரிக்கை

—:o:—

### தடுப்புக்காவல், அச்சுத்தடை சட்டங்களுக்குக் கண்டனம்

குடி உரிமை வலிவிழந்ததற்கான காரணங்கள்

கட்டாக், ஏப். 25—

தடுப்புக் காவல் சட்டமும், விசாரணை இல்லாமல் ஒருவரை சிறையிலடைத்து வைப்பதற்கான அதிகார விதியும், அரசியல் சட்டத்தில் இடம் பெற்றுள்ள வரையில், தன்னை ஒரு ஜனநாயக நாடாக இந்தியா கருதிக்கொள்ளக் கூடாது.

காஷ்மீர் பிரதமராக இருந்த ஷேக் அப்துல்லாவைப் பதவியிலிருந்து நீக்கின காஷ்மீர் அரசின் செயலில் நியாயம் இருக்கக் கூடும். ஆனால் அப்துல்லாவைக் கைது செய்ததற்கோ, சிறையில் தள்ளி வைத்ததற்கோ திருப்தியாக காரணங்கள் எதுவும் இதுவரைத் தரப்படவில்லை.

அப்துல்லாவை விடுதலை செய்ததின் விளைவு எதுவாக இருந்தபோதிலும், ஒரு சாதாரண நீதி மன்றத்தில் சட்டப்படி விசாரிக்கப்பட வேண்டுமென்பதையும், அல்லது தாமதமின்றி விடுதலை செய்யப்பட வேண்டுமென்பதையும் நீதி எதிர்பார்க்கிறது என்பதில் ஐயமில்லை.

—இவ்வாறு நேற்று முன்தினம் கட்டாக் நகரில் நடைபெற்ற அகில இந்திய குடி உரிமைச் சங்கத்தின் மாநாட்டில் தலைமை வகித்த ஜெயபிரகாஷ் நாராயண் கூறினார்.

குடி உரிமையின் மதிப்பை மக்கள் அறிந்துகொள்ளாது இருப்பதும், இம்பிரச்னையில் ஆளும் கட்சிக்குள்ள முழு அலட்சிய புத்தியும், மாற்றுக் கட்சி வலிமை குன்றிக் கிடப்பதும், ஒழுங்கானதும் அமைதியானதுமான நடைமுறைகளை சிலர் வேண்டுமென்றே புறக்கணித்து நடப்பதும், குடி உரிமைச் சங்கம் போதிய பலம் பெறாமல் இருப்பதற்கான காரணங்களாகும்.

எதற்கெடுத்தாலும் காங்கிரஸ் சர்க்கார் 144 தடை உத்தரவைப் போடுவது, எதிர்க் கட்சிகளின் சாதாரண அரசியல் நடவடிக்கைகளைப் பெரிதும் பாதிக்கிறது. மத்திய பாரத்தில் மட்டும் 300 விவசாயத் தொழிலாளர்கள் மீது சர்க்கார் வழக்குத் தொடுத்தது. இதுவரையில் தனக்குத் தெரிந்தவரையில், அவர்களில் ஒருவராவது நீதி மன்றத்தால் தண்டிக்கப்படவே இல்லை என நாராயண் குறிப்பிட்டார்.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

Best copy available.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர்: அண்ணதுரை

சென்னை 27—4—54 செவ்வாய்


## பர்மாவின் போக்கு!

ஆசிய நாடுகளிலே பர்மாவும் ஒன்று. எனவே கூடுமானவரை ஆசிய நாடுகளுக்குள், அரசியல் பொருளியல் துறைகளில் ஒருமைப்பாடு இருக்கவேண்டியது கட்டாயமாகும். அத்தகைய இருந்தால்தான், ஆசிய நாடுகளுக்கிடையில் ஒற்றுமை மலரும். அவ்வாறு உருவாகும் ஒற்றுமையும் உண்மையானதாகவும் இருக்க முடியும்.

ஆனல், இன்று மனப்பூர்வமான ஒற்றுமை ஆசிய நாடுகளுக்கிடையில் இருக்கிறதா என்றால், வேதனையுடன் இல்லை என்றுதான் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இருந்து வரும் கொள்கைப் பிணக்கை, வல்லரசுகளுக்குமுன் வெட்கத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டியதாகத்தான் இருக்கிறது.

தம் நாட்டின் மீதுள்ள அன்னிய மூலதனாதாரப் பிடிப்பை, அறவே நீக்கிக்கொள்ள வேண்டுமென ஆசிய நாடுகள் ஒவ்வொன்றும் துடியாய்த் துடிப்பதில் குற்றமொன்றுமில்லை. ஒரு தேசிய அரசின் அடிப்படைக் கோட்பாடே அதுதான். அவ்வடிப்படைக்கொப்ப தேசிய அரசான எதுவும், தம் நாட்டில், ஏற்கனவே குவிந்து கிடக்கும் வெளிநாட்டு மூலதனத்தைத் தமது தேசியச் சொத்தாக மாற்றிக்கொள்ளத்தான் முயற்சிக்கும். இம்முயற்சியை தேசியக் கண்கொண்டு பார்க்குங்கால் குறைபற்றதாகவே காணப்படும் என்பதில் ஐயமில்லை.

ஆசியப் பகுதியில் உள்ள தேசிய நாடுகளுக்கு மட்டுமே இக்கோட்பாடு உரித்தானது என்று சொல்வதற்கில்லை. உலகின் எப்பக்கத்திலுள்ள தேசிய அரசுகள் பின்பற்றி வந்த, வருகிற, வர இருக்கிற பொது கோட்பாடு இதுவேயாகும். இக்கோட்பாட்டைப் பின்பற்றுவதில் ஐரோப்பிய—ஆசியா என்ற பாகுபாடு எதுவும் கிடையாது. சிவப்பு—மஞ்சள் என்ற நிற பேதமும் கிடையாது. ஒரே அடிப்படையின் மீது கட்டப்பட்டு இயங்குவதுதான்!

ஆசிய நாடுகளில் ஒன்றான பர்மா, சென்ற பெரும் போரில் மற்றொரு ஆசிய நாடான ஜப்பானின் கூட்டால அணைப்பில் சிக்கி சீரழிந்து போய்விட்டது. ஆசிய நாடான ஜப்பான், ஆசிய நாடான பர்மாவிற்குத், தனது கூட்டால ஏற்பாட்டின் மூலம் செய்த நலன்கள் என்னென்ன, பர்மா மிகவும் தெளிவாக உணர்ந்து கொண்டிருக்கிறது; நடைமுறையில் அனுபவித்தும் இருக்கிறது. எனவே, ஆசியப் பகுதியைச் சேர்ந்ததாக இருந்தாலும், ஐரோப்பியப் பகுதியைச் சேர்ந்ததாக இருந்தாலும், வெளிநாட்டு அரசுகள் விஷயத்தில், மிகமிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்ற அரிய பாடத்தை பர்மா பின்பற்றி அணிந்துவிட்டது. போரின் பின் விளைவாக பர்மா பெற்ற பெரும் போதனை அதுவேயாகும். நிற்க,

பொதுவாக இந்தியர்களுக்கும் குறிப்பாகத் திராவிட நாட்டவர்க்கும் சொந்தமாக, பர்மாவில் 30 லட்சம் ஏகர் நஞ்செய் புஞ்செய் நிலங்கள் இருந்து வருகின்றன. வெறும் பொட்டல் காடாகக் கிடந்த அவைகளில் பெரும் பகுதியை இந்திய மூலதனத்தைக் கொண்டு செழிக்கும் கழனிகளாக மாற்றப்பட்டது. ஆறு ஆண்டுகளுக்கு முன்னுல், திராவிடருக்குச் சொந்தமாக இருந்த அந்நில வயல்களை, ஒரு சட்டத்தின் மூலம் பர்மா அரசாங்கம் தேசிய மயமாக்கிவிட்டது. பர்மாவின் அச்செயல் நியாய விரோதமானது என்று சொல்வதற்கில்லை. தன்னுடைய நாட்டில் அன்னியர் பொருளாதாரப் பிடிப்பு இருக்கக்கூடாது என்று எண்ணி, பர்மா கடைக்கொண்டது முறைதான். தக்கதாக இல்லாமல் இருக்க வேண்டுமானால், திராவிடரிடமிருந்து எடுத்துக்கொண்ட நில வயல்களை நியாயமாக மதிப்பிட்டு நஷ்டஈடு கொடுக்க முன்வரவேண்டும். கொடுக்கப்படும் நஷ்டஈடும் வெறும் பெயரளவிற்குக் கொடுப்பதாக இருக்கக்கூடாது.

நஷ்ட ஈடு கொடுத்து சொத்தைச்சொந்தமாக்கிக் கொள்வது என்பது, தேசிய அரசுகளுக்குள் ஏற்பட்டுள்ள புனிதமான நடைமுறையாகும். தங்களின் ஒப்புக்கொண்டுள்ள புனித ஏற்பாட்டிற்கு, வாய்ப்பு நேருங்கால் கட்டுப்பட்டு நடக்க மறுப்பது வருத்தத்தக்க என்பதோடுமட்டுமல்லாமல், கண்டிக்கத்தக்கதுமாகும். தாம் ஒப்புக்கொண்டுள்ள ஏற்பாட்டை மீறி நடக்கத் துணிவு கொள்ளும் ஒரு ஆட்சியை, பிற இனத்தில், மற்ற ஆட்சிகள் நம்புவதும் என்பதும் இயலாமல் போகும்.

திராவிடர்களுக்குச் சொந்தமான 30 லட்சம் ஏகர் நிலப்பரப்பை தேசியமயமாக்கச் செய்யப்பட்ட 1948-ம் ஆண்டு சட்டத்தில், கொடுக்கப்பட வேண்டிய நஷ்ட ஈடு பற்றி ஒரு திருத்தத்தை சென்ற ஆண்டில் பர்மா சர்க்கார் செய்திருக்கிறது. அதன்படி, முதல் தர ஏகராவிற்கு, அதன் ஓராண்டு நில வரிப்பைப்போல் 12 பங்கு நஷ்ட ஈடாகக் கொடுப்பதென்றும், படிப்படியாக நஷ்ட ஈட்டுத் தொகையைக் குறைத்துக்கொண்டு 1,100 ஏகராவுக்கு அதிகமாக வைத்திருப்பவர்களுக்கு, ஓராண்டு நிலவரித் தொகையையே நஷ்ட ஈடாகக் கொடுப்பது என்றும் அத்திருத்தம் கூறுகிறது. இந்த நஷ்ட ஈடு எவ்வளவு மோசமானது என்பதை அறிய, அங்கு நடைமுறையில் உள்ள நிலவரி ஏற்பாட்டை ஒருமுறை கவனித்தாலே போதுமானதாகும்.

அங்கு உயர்ந்தபட்ச நில வரியாக ஏகர் ஒன்றுக்கு 3 ரூபாயாகவும், குறைந்தபட்ச நிலவரியாக 12 அணுவாகவும் இருந்து வருகிறது. இதன்படி, பர்மா சர்க்கார் கொடுக்க முன்வந்த நஷ்ட ஈட்டில் அதிருப்தி கொண்ட இந்திய அரசாங்கம் சென்ற ஆண்டு தூதுக் குழு ஒன்றை பர்மாவிற்கு அனுப்பி, நஷ்ட ஈடு பிரச்னையில் முடிவு காண முயன்றது. ஆண்டு நிலவரியில் சராசரி 12 பங்கு விதம் நஷ்ட ஈடு தரவேண்டுமெனவும், அல்லது 15 பங்கு முதல் படிப்படியாகக் குறைத்து 8 பங்கு வரை கொடுக்க வேண்டுமெனவும் அத்தூதுக் குழு பர்மா சர்க்காரை வற்புறுத்தியது. அத்தூதுக் குழுவின் கோரிக்கையின்படி பார்த்தாலும்கூட, இவ்வகை நில பர்மா கொடுக்கும் நஷ்ட ஈடு மிகமிகக் குறைவானதே யாகும்: அதாவது, ஏகர் ஒன்றுக்கு 300 ரூபாய் விலை மதிப்பு ஆகிறது. ஆனல், இந்திய தூதுக் குழு கேட்ட நஷ்ட ஈடோ ஏகர் ஒன்றுக்கு ரூபாய் 24 முதல் ரூ 45 வரைதான் ஆகிறது. இக்குறைந்தத் தொகையையும், பர்மா சர்க்கார் ஒப்புக்கொண்டு, பிரச்னையை முடிவிற்குக் கொண்டு வர விரும்பப்படவில்லை.

தங்களிடமிருந்து எடுத்துக்கொண்ட நிலத்திற்காக, நிலவரியில் 25 முதல் 35 வரை நஷ்ட ஈடாகக் கொடுக்க வேண்டுமென பர்மியக் குடிகள் தங்கள் சர்க்காரை வற்புறுத்தி வருகின்றனர். நஷ்ட ஈடு பற்றி ஆராய்ந்து அறிய பர்மா சர்க்காரால் நியமிக்கப்பட்ட விசாரணை குழுவும் சராசரி 20 பங்கு நிலவரியை நஷ்ட ஈடாகக் கொடுக்கவேண்டுமென சிபார்சு செய்து இருக்கிறது. ஆனல், பர்மா சர்க்கார் கொடுக்கத் தீர்மானித்திருக்கும் நஷ்ட ஈடோ, இவைகள் அனைத்துக்கும் மிக மிகக் குறைந்ததாகவே இருக்கிறது.

பர்மாவானது ஜப்பானின் பிடியில் சிக்கிய நாளில் இருந்தே, அதாவது 1940-ம் ஆண்டிலிருந்தே பர்மாவிலுள்ள நிலத்திலிருந்து வருமானமாகக் காசொடிந்த ஊசியளவும் திராவிடருக்குக் கிடைக்கவில்லை என்பது கருதத்தக்கதாகும். இந்நிலையில் வோட்ட முதலுக்கும் சரியான நஷ்டஈடு கொடுப்பதிலும் பர்மா பிடிவாதம் காட்டுகிறது என்றுல் அது, எந்த வகையிலும் மன்னிக்கக்கூடியதாகாது.

நஷ்ட ஈடு கொடுப்பதில் பர்மா சர்க்கார் கொண்டுள்ள போக்கு எப்படி மன்னிக்க முடியாததோ, அதைப்போலவே திராவிட நாட்டு நகரத்தார்களும், தங்கள் மூலதனத்தைக் கொண்டு திராவிட நாட்டின் தொழில் வளத்திற்கு வழிவகை செய்யாமல், பர்மாவில் கொண்டுபோய் மூலதனத்தைப் போட்டதும், வன்மையாகக் கண்டிக்கத்தக்கதாகும்

உள்நாட்டில் வடநாட்டு மூலதனத்தோடும் வெள்ளை மூலதனத்தோடும் போட்டியிடுவதால், கொள்ளை லாபம் கிடைக்காதே என்ற கெடுமதி கொண்டு, சொந்த நாட்டின் தொழில் முன்னேற்றத்தில் அக்கரை காட்ட நகரத்தார்கள் தவறிவிட்டது, பிறந்த நாட்டிற்குச் செய்த மகத்தான துரோகமாகும். போட்டி அவ்வளவாக இல்லாத பர்மாவில் தங்கள் மூலதனத்தைப் போட்டு, பர்மா முழுவதிலும் எதேச்சாதிகாரமாக பொருளாதாரத் துறையில் நிலையாகத் தங்களுடைய ஆட்சியை நிலைநாட்டிவிடலாம் என நகரத்தார்கள் கொண்டிருந்த பேராசைக்கு, பர்மா சர்க்கார் நல்ல பரிசு கொடுக்க முன் வந்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. பிறந்த நாட்டிற்குச் செய்த துரோகத்திற்கு, நகரத்தார்கள் இன்று விடும் ரத்தக் கண்ணீர் கண்டு, சொந்த நாட்டினர் அனுதாபம் காட்டத் தயங்குவதில் ஆச்சரியப்படத்தக்கது ஒன்றுமில்லை.

முன்னுள் நகரத்தார் செய்த தவறுக்காக, அவர்களைப் பழிவாங்க பர்மா சர்க்கார் முன்வந்திருப்பது எந்த வகையிலும் நியாயமானதாகாது. தனது நாட்டில் உள்ள அன்னிய மூலதனத்தைத் தகுந்த நஷ்டஈடு கொடுக்காமல் பறிமுதல் செய்யலாம் என்ற முடிவுக்கு பர்மா வந்திருக்குமானுல், அம்முடிவு சர்வதேச நடைமுறைக்கு உகந்ததாகு என்று பர்மா முதல் முதலாக சிந்தித்துப் பார்த்து முடிவிற்கு வரவேண்டும். சர்வதேசக் கொள்கைக்கு ஒத்ததாக இருந்தாலும், இல்லாமற் போனுலும், பர்மாவின் போக்கு பறிமுதல் போக்காகத்தான் இருக்கிறது என்பதில் ஐயமில்லை.

பர்மாவின் நடத்தை ஆசிய நாடுகளிடையே நல்லுறவை ஏற்படுத்த உதவாது. சின்னஞ் சிறு நாடான பர்மாவிற்கு இருக்கும் துணிவுகூட, 'ஆசியாவின் ஜோதி'யைப் பிரதமராகக் கொண்ட இந்தியாவிற்கு இல்லை. பர்மாவின் செயலை முன்மாதிரியாக இந்தியாவும் கொண்டு, இங்குள்ள அன்னிய மூலதனத்தை, பெயரளவிற்கு நஷ்டஈடு கொடுத்துப் பறிமுதல் செய்வது என முனைந்தால், ஏராளமான அன்னியர் மூலதனம் இந்திய மக்களின் சொத்தாகி விடும். பர்மாவைப் பார்த்த பின்னரும் பண்டிதருக்கு, இத்துறையில் துணிவு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. இத்துணிவு மற்றவர் விஷயத்தில் ஏற்படவில்லையானுலும், பர்மா விஷயத்திலாவது பண்டிதருக்கு ஏற்பட்டு இருக்கவேண்டும். அதுதான் எவரும் எதிர்ப்பார்க்கக் கூடியதும், நியாயமானதுமாகும்.

ஆனல், பண்டிதரின் செயலோ, நேர்மாறுனதாக இருக்கிறது. திராவிடர் மூலதனத்திற்குத் தக்க நஷ்டஈடு கொடுக்க முன் வராது, அடம் பிடித்து நடந்துகொள்ளும் பர்மாவிடம் பரிவு காட்டுகிருர் பண்டிதர். திராவிடர் மூலதனந்தானே நஷ்டமாகிறது, அதில் நமக்கென்ன கஷ்டம், என வடநாட்டு மூலதனத்தின் பாதுகாவலராக உள்ள பண்டிதர் எண்ணிவிட்டாரோ என்னவோ? அவ்வாறு இல்லையானுல், திராவிடர் மூலதனத்திற்கு, நேர்மையான நஷ்டஈடு கொடுக்க மறுக்கும் பர்மா சர்க்காரிடம், பண்டிதர் பரிவு காட்டவேண்டிய நியாயமே கிடையாது.

இந்தியாவிற்கு பர்மா 68 கோடி ரூபாய்க்கு மேல் கடன் தரவேண்டி இருந்தது. அதில் சுமார் 40 கோடியைத் தள்ளிக் கொடுத்துவிட்டார் பண்டிதர். மீதமுள்ளதற்கும் அரிசி வாங்கினதற்கும், கொளும்பு இட்டப்படி உதவி நிதியாகவும் கொடுத்து, பர்மா சேரவேண்டிய கடன் தொகையை எட்டில் நேர் செய்துவிட்டார் பெருந்தகைடாம் பண்டிதர். என்ன நியாயம் இது?

ஏதோ சர்வதேச நடைமுறைக்கு அஞ்சி, வெறும் பெயரளவிற்கு நஷ்ட ஈடு கொடுப்பதாகப் பசப்பி, உண்மையில் பர்மாவில் உள்ள திராவிடர் மூலதனத்தை விழுங்கிவிடக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிற பர்மாவிற்கு, அது பட்ட கடனில் 40 கோடி ரூபாயைத் தள்ளிக் கொடுக்கப் பண்டிதர் முன்வருவது என்றுல், நியாய புத்தி படைத்தவர் எப்படி கண்டிக்காமல் இருப்பர்?

திராவிடர் மூலதனத்தைப் பறிமுதல் செய்ததற்காக மகிழ்ந்து, பர்மா சர்க்காருக்கு பண்டிதர் தந்த பரிசுத் தொகையா, இந்த 40 கோடி ரூபாய்? அல்லது தாம் 'ஆசிய ஜோதி' ஆவதற்காக பர்மாவிற்குக் கொடுக்கப்பட்ட 'லஞ்சமா' இது? எதுவாக இருந்தாலும், பர்மாவின் போக்கும், பண்டிதரின் நடத்தையும் வருந்தத்தக்கதும் கண்டிக்கத்தக்கதுமாகும் என்பதில் ஐயமில்லை.

## 70 கோடி செலவில் ஹிராகுட் அணை

### இதுவரை ரூ. 30 கோடி செலவாகியிருக்கிறது

புதுடில்லி, ஏப். 26—

ஹிராகுட் அணைக்கட்டு, அதன் முழு உயரத்தில் பாதியான 60 அடி உயரம், அதன் 15,748 அடி நீளத்திலும் எழுப்பப்பட்டுவிட்டது. குறிப்பிட்ட காலத்திற்குள் அதன் வேலைகள் முடிந்துவிடக்கூடுமென எதிர்பார்க்கப்படுகிறது. 1956, ஜூலையில், அது, நீர்ப்பாசனத்திற்குத் தேவையான தண்ணீர் தருவதாயும், மின்சார உற்பத்தி நிலையங்களை உடையதாயும் இருக்கும்.

இதன் முதல் பகுதிக்கு 70 கோடியே, 78 லட்சம் ரூபாய் செலவாகும் என மதிப்பிடப்பட்டு, ஒரிசா அரசாங்கத்தால் அந்த மதிப்பீடும் அங்கீகரிக்கப்பட்டுவிட்டது. இதுவரையில் ரூ. 33 கோடிக்கு மேல் செலவு செய்யப்பட்டுவிட்டது.

## ரஷ்யக் கோரிக்கைக்கு டல்லஸ் எதிர்ப்பு

### ஜினிவா மாநாட்டுத் தலைவர் பற்றி உடன்பாடு

ஜெனிவா, ஏப். 26—

ஜெனிவா மாநாடு இன்று பிற்பகல் கூட வேண்டிய நேரத்திற்கு 25 நிமிஷம் தாமதித்தே கூடியது.

நாலு வல்லரசுகள் தலைமை வகிக்கலாம் என்றுல், சீனுவும் தலைமை வகிக்க வேண்டுமென்று ரஷ்யா கோரியது. இதை அமெரிக்க அரசாங்க மந்திரி டல்லஸ் ஆட்சேபித்தார்.

மாநாட்டுத் தலைவர் பதவி பற்றி ஈடனும், ரஷிய அயல் நாட்டு மந்திரி மாலடோவும் 20 நிமிஷம் கூடிப் பேசி, கீழ்கண்டபடி உடன்பாடு கண்டனர். அதன்படி தாய்லாந்து, ரஷ்யா, பிரிட்டன் மந்திரிகள் வரிசையாக மாற்றி தலைமை வகிக்க வேண்டும் என்பதே அந்த சமரசத் திட்டம். இந்த ஏற்பாடு கொரியா பற்றி மாநாடு விவாதிக்கும்நாட்களுக்குமட்டும்தான்.

அதன்படி இன்றையக் கூட்டத்திற்கு தாய்லாந்து அயல் நாட்டு மந்திரி நாதிப் பாங்க் பிரபாந்த் தலைமை வகித்தார். நாளை மாலடோவும் மறுநாள் ஈடனும் தலைமை வகிப்பர். பின்னர் வரிசைக் கிரமப்படி தலைமை வகித்து வருவர்.



# “தெற்கு வளமுற வாழ்ந்தபோது வடக்கு கடலில் வீழ்ந்திருந்தது”

## “பண்பால் — பழக்கத்தால் தெற்கும் வடக்கும் ஒன்ரு?”

### தோழர் அன்பழகன் சுட்டிக் காட்டும் சரித்திரச் சான்றுகள்

“இளைஞர்கள் உள்ளமானது எந்தவிதமான ஜாதி வெறியும், பட்டம் பதவி மோகம், அமைச்சர் பதவியின்மேல் ஆசையும் கொண்டதல்ல. இத்தாலிய நாட்டு வரலாற்றில் மாஜினியின் குரல் கேட்டு ஆயிரக்கணக்கான இளைஞர்கள் போராட்டத்தில் இறங்கியிருக்கிருர்கள். இந்தியாவிலும் காந்தியாரின் குரல் கேட்டு விடுதலை இயக்கத்திலே ஆயிரக்கணக்கான மக்கள் ஈடுபட்டார்கள். விடுதலை இயக்கத்தின் வேலைகள் முற்றுப்பெற்ற பின்னர் நாட்டில் காங்கிரசின் மதிப்பு குறைந்து போய்விட்டது. காரணம் வயது முதிர்ந்தவர்கள், பட்டம், பதவி ஆசை கொண்டவர்களின் நுழைவால் காங்கிரசு செல்வாக்கிழந்துவிட்டது.”

—இவ்வாறு, 25—4—54 ஞாயிறு மாலை, மதுரை இளைஞர் முற்போக்கு மன்றத்தின் இரண்டாவது ஆண்டு விழாவை முன்னிட்டு, ராஜாஜி பூங்காவில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் க. அன்பழகன் 'வடக்கும்-தெற்கும்' என்னும் பொருள் பற்றி பேசுகையில் குறிப்பிட்டார்.

மேலும் அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

“இந்த நாட்டில் உள்ள மக்கள் எதுவேண்டுமானுலும் செய்ய முடியும். வயலிலே இறங்கி உழைக்கிருர்கள். ஆலையிலேயும் உழைக்கிருர்கள் ஆனல் அவர்களின் உழைப்பு வீணுய்ப்போய்விடுகிறது. மக்கள் வறுமையால் வாடுகிருர்கள். இந்தச் சூழ்நிலை எப்படி ஏற்பட்டது. ஆண்டவன் திடீரென்று ஒரு நாள் இந்த நாட்டிலே தோன்றி உழைக்கும் மக்களுக்கெல்லாம் தகுந்தபடி ஊதியம்கிடைக்காமல்போகட்டும் என்ற சாபம் கொடுத்துச் சென்ருரா? இல்லை என்று சுலபமாகக் கூறிவிடலாம். காரணம் என்ன? சகல துறைகளிலும் வடக்கு தெற்கை அடக்கி வைத்துக்கொண்டு இருக்கிறது. பழங்கால நிலப்பரப்பும், புதிய நிலப்பரப்பும் வெவ்வேறுகத்தான் இருந்து வந்திருக்கிறது இது வரலாறு காட்டும் படம். உலகம் தோன்றிய காலந்தொட்டு இது இப்படியேதான் இருந்து வந்துள்ளது. கடலையும், மலைத் தொடரையும், பூமி நிலையையும் ஆராய்ச்சி செய்து தனது கருத்தைத் தெரிவித்த அறிஞர்கள் எல்லாம் வடக்கு உயர்ந்தும், தெற்கு தாழ்ந்தும் இருக்கிறது என்றுதான் கூறியிருக்கிருர்கள்,”

“தென்னுடு பெரிய நிலப்பரப்பாகவும்,பெரிய பெரிய அரசர்கள் ஆட்சி புரிந்த காலத்தில் வடக்கு கடல்களால் சூழப்பட்டிருந்தது என்பதற்குச்சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. தென்னுட்டு மக்களின் நாகரீகப் பழக்க வழக்கங்கள் தனிவானது.”

“இலக்கிய வளமில்லாத இந்தியைத் தேசிய மொழி என்று புகுத்துகிருர்கள். இதை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? தமிழ் நாடு இருக்கிறது. அதற்குத் தமிழ் தேசிய மொழிஎன்று சொன்னுலும் ஆந்திர நாடு, அதற்குத் தெலுங்கு தேசிய மொழி என்று கூறினுல் ஒப்புக்கொள்ளலாம். ஆனல் பாரதம் என்று இந்தியாவிற்குப் பெயர் வைத்துக்கொண்டு இந்தி அதன் தேசிய மொழி என்று கூறினுல் அதை ஏற்றுக்கொள்ள முடியுமா? கட்டாய இந்தி தென்னுட்டில் புகுத்தப்படுமானுல் தமிழ் மொழி வளர்ச்சியடையாது என்று கூறினேம். கேட்காமல் கட்டாய பாடமாகக் கொண்டு வரப்பட்டதால்தான் அந்த முறையை எதிர்த்தோம். அதனுடைய பலன் இன்று தமிழ் மொழியில் ஆர்வம் கொண்டவர்கள் பலர் இந்தியை எதிர்க்கின்றுர்கள்.”

“திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேராத பத்திரிகைகள் இந்தியை எதிர்க்கின்றன. மதுரையிலே இருந்து வெளிவரும், 'தமிழ் நாடு' தினசரிப் பத்திரிகை திராவிட முன்னேற்றக் கழகத்தின் பத்திரிகை அல்ல. அந்தப் பத்திரிகை இந்தி மொழித் திணிப்பைக் கண்டித்துத் தலையங்கம் தீட்டியிருக்கிறது. தமிழ் நாட்டில் உள்ள ரயில் நிலையங்களில் உள்ள பெயர்ப் பலகைகளில் இந்தி மொழிக்கு முதலிடம் கொடுக்காதீர்கள், மக்களின் உணர்ச்சி அந்தப் பெயர்ப் பலகையை உடைத்தெறிவதற்குள் இந்தி எழுத்துக்களை அழித்துவிடுங்கள் என்று எழுதிற்றே அதன் பொருள் என்ன? இந்தி மொழியை தங்கள் ஆதிக்கத்தால் தமிழ் நாட்டில் திணிக்க முயலுவதை எதிர்ப்பதின் அறிகுறி யல்லவா? இதைப் போலவே வடக்கு சகல துறைகளிலும் தெற்கை அடிமைப்படுத்த முயலுகிறது இதை அனுமதிக்க முடியாது.”

கூட்ட ஆரம்பத்தில் பேசிய ம. இளமாறன் ‘இளைஞர்களிடையே முற்போக்குக் கருத்துக்களும், செயல்முறைகளும் மேலோங்க வேண்டுமென்றும், சமூகத்தில் மாபெரும் புரட்சியை ஏற்படுத்தவேண்டும்” என்றும் குறிப்பிட்டார்.

அடுத்து மதுரை தி. மு. க. செயலாளர் தோழர் எஸ். முத்து பேசுகையில், “இராசகோபாலாச்சாரியார் அமைச்சரவையினர் புதுக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்ததற்காகவே அதை எதிர்ப்பதாக காமராசர் ஆதரவாளர்கள் கூறினுர்கள். அதன் அடிப்படையில்தான் இராசகோபாலாச்சாரியின் அமைச்சரவையும், மாற்றியமைக்கப்பட்டு, காமராசர் அமைச்சரவை அமைக்கப்பட்டிருக்கிறது அண்மையில் கூடப்போகும் சென்னை சட்ட சபைக் கூட்டத்தில் மேற்கண்ட புதுக்கல்வித் திட்டம் திரும்பப்பெறவில்லையானுல், காமராசரும் பதவி வேட்டைக்காகவே இவ்வளவு சூழ்ச்சிகளும் செய்திருக்கிருர் என்று கண்டிப்போம்” என்றுகுறிப்பிட்டார்

இந்திய பூமியில் மொத்தம் 2,268 பொது உபயோக டெலிபோன் நிலையங்கள் வேலை செய்து வருகின்றன. இவற்றில் 419 நிலையங்கள், சென்ற ஆண்டில் ஏற்படுத்தப்பட்டவையாகும்.


****************************************

# சேலம் மாவட்ட தி.மு.க. மாநாடுகள்

சேலம் V. மார்க்கெட்டில் அமைத்துள்ள பரசுராமன் பந்தலில் — வள்ளியப்பன் அரங்கில் நடைபெறும்.

| | |
|---|---|
| மே 1: சனிக்கிழமை | மே 2: ஞாயிற்றுக்கிழமை |
| சமுதாய சீர்திருத்த மாநாடு | அரசியல் மாநாடு |
| தலைவர்: தோழர் ப. உ. சண்முகம் | தலைவர்: தோழர் இரெ. இளம்வழுதி, M.A.,B.L. |
| துவக்குபவர்: தோழர் கோகுல கிருஷ்ணன், B.A., B.L. | துவக்குபவர்: மதுரை தோழர் எஸ். முத்து |

மற்றும் பொதுச்செயலாளர் அண்ணுதுரை அவர்களும், இயக்க முன்னணி வீரர்களும் கலந்துகொள்வார்கள்

★

இரு நாட்களிலும் நடிப்புப் புலவர் கே. ஆர். ராமசாமி குழுவினர் நடிக்கும் 'காதல் ஜோதி,' 'ஓர் இரவு' நாடகங்கள் நடைபெறும்

கட்டணம்:—வரவேற்பாளர் ரூ. 5; பிரதிநிதி: ரூ. 3; ஆதரவாளர்: ரூ. 2; பார்வையாளர்: ரூ. 1; பெண்கள்: அணு 8.

—வரவேற்புக் குழுவினர்.

****************************************


# பிரெஞ்சிந்திய விடுதலை வீரர்களுக்குப் பாராட்டு

—(:)—

## சர்க்கார் அடக்குமுறைக்குக் கடுமையான கண்டனம்

### மற்றக் கட்சிகளுடன் தி. க.-வும், தி. மு. கழகமும் ஒன்றுபட்டன

வழக்கறிஞர் பெருமாள் தலைமையில் கூடிய சர்வ கட்சிக் கூட்டத்தின் முடிவு

புதுச்சேரி, ஏப். 25—

மக்களின் அறப் போராட்டத்தில் கலந்துகொண்ட எல்லை விடுதலை வீரர்களுக்குப் பாராட்டையும், குறிப்பாக பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறைகளுக்கு ஆளாகி அடி, உதை பட்ட தோழர்களுக்கு விடுதலைப் படையினரின் அனுதாபத்தையும் தெரிவித்துக்கொண்டதுடன்,

பிரெஞ்சு அரசாங்கம் கட்டவிழ்த்துவிட்டிருக்கும் கடுமையான அடக்குமுறைகளைக் கண்டித்தும், சிறை பிடித்திருந்த தோழர்களை, மூர்க்கத்தனமாகத் தாக்கிய போலீசாரின் போக்கைக் கண்டித்தும் தீர்மானங்களை பிரெஞ்சிந்தியாவில் கூடிய சர்வ கட்சிக் கூட்டம் நிறைவேற்றியுள்ளது.

பிரெஞ்சிந்திய தேசிய காங்கிரசால் கூட்டப்பட்ட 'பிரெஞ்சிந்திய இணைப்புக் கட்சிகளின்' கூட்டம் ஒன்று இன்று நடைபெற்றது. கூட்டத்தில், இளைஞர் காங்கிரஸ், மாணவர் காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சி, பி. சோ. கட்சி, திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

புதுச்சேரி வழக்கறிஞர் சங்கத் தலைவரும், பிரெஞ்சிந்திய இணைப்புக் காங்கிரசின் மத்தியக் கமிட்டி உறுப்பினருமான திரு. எஸ். பெருமாள் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினுர்.

## தென்னிந்தியருக்குத் தரும் மரியாதை இதுதானு?

### டெல்லி சட்ட சபையில் காங்கிரஸ் உறுப்பினர் கோபம்!

தாணுப் பிள்ளை—பொன்னுசுவாமி விவாதம்

புதுடில்லி, ஏப். 25—

“தென்னிந்தியப் பிரதிநிதிகளுக்குத் தரப்படும் மரியாதை இதுதான் என்றுல். இந்தி பேசாத மக்கள், இங்கு ஏதாவது கவனிக்கப் படுகிருர்கள் என்று தென்னுட்டு மக்கள் நம்புவார்கள் என்று நீங்கள், எப்படி எதிர்பார்க்க முடியும்?”

என்று, மக்கள் சபையில் நிதி மசோதா விவாதத்தில் கலந்துகொண்ட, காங்கிரஸ் உறுப்பினர் பி டி. தாணு பிள்ளை கூறினுர். வழக்கத்திற்கு மாறாக, காங்கிரஸ் உறுப்பினர்களும்கூட, இந்தி பற்றிய விவாதத்தில் கலந்துகொண்டனர். அவர் மேலும் கூறியதாவது:—

“இந்தி தேசிய மொழி என்று கருதப்படுகிற காரணத்தாலேயே, இந்தி தெரியாத தென்னிந்திய அங்கத்தினர்களின் சிரமத்தை உணராது, பல வட இந்திய அங்கத்தினர்கள், ஆங்கிலத்தில் பேசத் தெரிந்தும் கூட வேண்டுமென்றே இந்தியில் பேசுகிருர்கள். இந்தப் பேச்சுக்களுக்கான மொழிபெயர்புகள் கூடக் கிடைப்பதில்லையே? கேள்விகள்கூட இந்தியில் கேட்கப்படுகின்றன. சர்க்கார் தரப்பினரும்கூட இந்தியிலேயே சில நேரங்களில் பதில் சொல்லுகிருர்களே?” என்று கூறினுர்.

திரு-கொச்சியைச் சேர்ந்த கம்யூனிஸ்டு அங்கத்தினர் பி. டி. பொன்னூஸ் என்பவர், “இது அசௌகரியமான உபகேள்விகளைத் தவிர்ப்பதற்காக,” என்று கிண்டலாகக் கூறினுர்.

இந்திய வானிலை அறிக்கைப் பிரகாரம், 1953-ம் ஆண்டில், மொத்தம் 5,840 வானிலை தோஷ்ய அறிக்கைகள் வெளியிடப்பட்டன; அவற்றில் 90 சதவிகிதம் சரியாக இருந்தன.

# மைசூர் ரேவண்ணாவைக் கொல்ல முயற்சி

—o—

## கத்தியால் குத்த வந்தவனை ஒரே அடியில் தரையில் சாய்த்த எம்.எல்.சி.

பெங்களூர், ஏப். 23—

மைசூர் மேல்சபை அங்கத்தினர் திரு. ஆர். பி. ரேவண்ணா என்பவரை கொல்வதற்கு முயற்சிக்கப்பட்டது.

சட்டசபை அங்கத்தினர்களுக்குத் தங்குவதற்காகத் தரப்பட்டுள்ள இடங்களில் ஒன்றான 'பார்க் அவுஸ்'க்கருகே அவர் தனியாக வந்து கொண்டிருந்தபோது யாரோ இருவர் அவரைப் பின் தொடர்ந்தனர். ஒருவர், சைக்கிளில் ரேவண்ணாவை முந்திக்கொண்டு சென்றார்; இரண்டாமவர் ரேவண்ணாவின் பின்புறத்தில் நின்றுகொண்டார். கணநேரத்தில் தன் முதுகுப்புறமாக, கத்தி ஒன்று உராய்வதைக் கண்டதும் ரேவண்ணா திரும்பி, கத்தி வைத்திருந்தவரை ஓங்கி அறைந்தார். அவன் தரையில் சாய்ந்தான்.

அடிபட்டவனும், மற்றவனும், திரு. ரேவண்ணா உதவிக்காக ஆள் தேடு முன்னர் ஓடிவிட்டனர்.

சட்டசபை அங்கத்தினர் ஒருவருக்கு சின்னாள் முன்பாக, துப்பாக்கி ஒன்று காணாமற்போனது பற்றி, சட்டசபையில் பேசியதற்காக பயமுறுத்தல் கடிதங்கள் அநாமதேயமாக வந்திருந்தது போலவே திரு ரேவண்ணாவிற்கும் வந்திருந்தனவாம்; ஆனால், அக்கடிதங்களை அவர் பொருட்படுத்தாது கிழித்தெறிந்து விட்டாராம்.

தோழர் ரேவண்ணா இந்தச் சம்பவத்தை உடனே மேல் சபைத் தலைவரான திரு. பாஷ்யம் அவர்களுக்கு போன் மூலம் தெரிவித்தாராம்.

பாஷ்யம் அவர்கள், ரேவண்ணாவைச் சாய்க்க செய்யப்பட்ட முயற்சி, அவர் மேல் சபையில், ஒரு துப்பாக்கி காணாமற்போனது பற்றி பேசியதின் காரணத்திற்காகத்தான் என்றால், நாட்டிலே, பொது வாழ்வு மிகவும் வருந்தத்தக்க நிலையிலிருப்பதாகக் கூறினார்.

### ராயநல்லூர் தி. மு. க.

22—4—54 இரவு 8 மணிக்கு செயலாளர் தங்கராசு தலைமையில் நடைபெற்ற தி. மு. கழகக் கமிட்டிக் கூட்டத்தில், திருச்சி பொதுக்குழு தீர்மானங்களை ஆதரித்தும், தமிழ்நாடு உழைப்பாளர் கட்சித் தலைவர் போக்கை கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன

### அம்பேத்கார் பிறந்ததின விழா

பம்பாய், ஏப் 25—

திருநெல்வேலி மாவட்ட ஆதிதிராவிட மகாஜன சங்க பம்பாய் கிளையின் சார்பில், டாக்டர் பி ஆர். அம்பேத்கார் 63வது பிறந்தின விழா 18-4—54 மாலை 7 மணிக்கு தாராவி ராமர்வாடி மைதானத்தில் நடைபெற்றது. தோழர்கள் நெல்லை இரா. இளம்வழுதி விழாவைத் துவக்கிவைத்தார்; மந்திரமூர்த்தி விழாவிற்கு தலைமை தாங்கினார் வி. எஸ். டி ராஜா அம்பேத்கார் படத்தைத் திறந்துவைத்தார்; டி. கே. ராஜ் சி த. மு இரா. ஆரியசங்காரன், த. மு பொற்கோ, வி. எஸ் ராஜ் ஆகியோர் பேசினர்.

* * *

பம்பாய், ஏப். 25—

இச்சங்கத்தின் சார்பில் கவிஞர் முருகேசனார், திருமதி ஜெகதாம்பாள் அம்மை ஆகியவருக்கும் 18 4—54 மாலை 3 மணியளவில் வரவேற்கப்பட்டது. குடியரசு நிலையத்தில், தோழர் மந்திரமூர்த்தி தலைமையில் வரவேற்பு நடைபெற்றது. தோழர் வி. எஸ். டி. ராஜா "சங்கப்பணி" என்பது பற்றி பேசினார்.

இந்தியத் தொழிற்சாலைகளில், மின்சார விசிறிகள் உற்பத்தி 1952-ல் 1,95,400 ஆக இருந்தது, 1953-ல் 2,01,805 ஆக அதிகரித்திருந்தது.

### 'தீச்சுடர்'

ஆசிரியருக்கு உடல் நலமின்மையாலும், பதிவு எண், அஞ்சல் சலுகை கிடைக்காத காரணத்தாலும் ஏப்ரல் திங்களில் தற்காலிகமாக நிறுத்தப்பட்டிருந்த 'தீச்சுடர்' மே திங்கள் முதல் வாரத்திலிருந்து தவறாமல்வெளி வரும். அஞ்சல் சலுகை, பதிவு எண் எம். 6454 ஆகக் கிடைத்துவிட்டது அதற்குள் ஏஜெண்டுத் தோழர்கள் அவரவர்கள் பாக்கித் தொகையை அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம். வெள்ளிக்கிழமைதோறும் 'தீச்சுடர்' எல்லா ஊர்களிலும் கிடைக்கும். —நிர்வாகி.

### உங்கள் குறிப்புக்கு!

புதுடில்லி, ஏப். 26—

மாநில சர்க்கார்களின் அபிவிருத்திக் கமிஷனர்கள் மாநாடு ஒன்று உதகமண்டலத்தில் 1954 மே 27-ந் தேதி முதல் 5 நாள் நடைபெறவிருக்கிறது; சமுதாய அபிவிருத்தித் திட்டம், தேசிய விஸ்தரிப்புத் திட்டம் ஆகிய இரண்டு சம்பந்தமாகவும் சகல பிரச்னைகளையும் இம்மாநாடு ஆராயும்.

1952 அக்டோபரில் ஆரம்பிக்கப்பட்ட சமுதாய அபிவிருத்தித் திட்டம் 55 திட்டங்களுடன் (165 அபிவிருத்தித் தொகுதிகள்) துவங்கப்பட்டது: அது இப்போது மேலும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது; சுமார் 220 லட்சம் பேர் உள்ள 24 000 கிராமங்களுக்கு அது பிரயோசமாகிறது; சென்ற அக்டோபரில் ஆரம்பமான தேசிய விஸ்தரிப்புத் திட்டம் சுமார் 170 லட்சம் ஜனங்களுள்ள சுமார் 25,000 கிராமங்களுக்குப் பிரயோசமாகிறது எனவே, இப்போது மொத்தம் 390 லட்சம் ஜனங்களுள்ள 49,000 கிராமங்கள் இத்திட்டத்தால் பலன் பெறுகின்றன.

### உங்களுக்குத் தெரியுமா?

★

**கேள்விகள் :**

1 "புதிய இந்தியாவை நிர்மாணிப்பதற்கான இந்த மாபெரும் முயற்சியில் எல்லோரும் கலந்துகொள்ளுங்கள்"— இந்த வேண்டுகோளை பிரதம மந்திரி எந்த சந்தர்ப்பத்தை யொட்டி விடுத்தார்?

(அ) தேசிய திட்டக் கடன்
(ஆ) மத்திய உப்பு ஆராய்ச்சி ஸ்தாபனம்
(இ) கங்காராம் ஆஸ்பத்திரி

2. தபால் - தந்தி இலாகா, 35 மொழிகளில் கையாண்டு வரும் தபால்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

(அ) நாளொன்றுக்கு 30 லட்சம்
(ஆ) நாளொன்றுக்கு 50 லட்சம்
(இ) நாளொன்றுக்கு 70 லட்சம்

3. கிராம விஸ்தரிப்பு என்பது என்ன?

(அ) கிராமவாசிகளின் சமுதாய — பொருளாதார வாழ்க்கைக்குப் புத்துயிர் அளிக்கும் முயற்சியைத் துவக்கிவைக்கும் ஸ்தாபனம்
(ஆ) கிராமப் பிரதேசங்களில் சமுதாய அபிவிருத்தி முறை

4 கீழ்க்கண்ட ஆராய்ச்சி ஸ்தாபனங்களில் எது தற்போது நிர்மாணிக்கப்பட்டு வருகிறது?

(அ) மத்திய இயந்திர நுட்ப ஆராய்ச்சி ஸ்தாபனம்;
(ஆ) மத்திய மருந்துச் சரக்குகள் ஆராய்ச்சிக் கழகம், லக்னோ
(இ) மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகம், சென்னை

**விடைகள் :**

1 (அ); 2 (இ); 3 (அ); 4 (அ).

# கொள்கையில் உறுதியுடன் உழைத்த மேதை!

## காந்தியார் படத் திறப்பு விழாவில் நெடுஞ்செழியன் பாராட்டு

20—4—54 மாலை 5 மணிக்கு தோழர் வி. பெ. பழனிவேலன் தலைமையில், மேட்டுப்பாளையம் ஊராட்சி மன்றத்தினர் தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு வரவேற்பளித்து வாழ்த்திதழ் வாசித்தளித்தனர்.

அதுபோது, தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், காந்தியார் படத்தைத் திறந்து வைத்து, அன்னார் நாட்டிற்கு செய்த அருந் தொண்டினைப் பற்றியும், கொள்கையில் உறுதி கொண்டு உழைத்தமை குறித்தும், ஊராட்சி மன்றங்கள் அவர் கூறிச்சென்ற சிறந்த கருத்துக்களை மாத்திரம் கடைபிடித்து நல்ல முறையில் கிராம மக்களுக்கு பணியாற்ற வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

தலைவர் முடிவுரைக்குப் பின் ஊராட்சி மன்றத் தலைவர் நன்றி நவில கூட்டம் இனிது முடிந்தது.

### திருமணம்

13—4—54 காலை 9 மணிக்கு, ஆத்தூர் லண்டன் மிஷன் இல்லத்தில் தோழர் எம். பி. சுப்பிரமணியம், எம். எல். ஏ. அவர்கள் தலைமையில், தோழர் ஏ. என். கோவிந்தராஜுலுவுக்கும்— தோழியர் ஏ. பாலாமணிக்கும் வாழ்க்கை ஒப்பந்தத்தை தோழர் என். என். இராமசாமி நடத்திவைத்தார். இதன் நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ 1 நன்கொடையாக அளிக்கப்பட்டது — வரப்பெற்றோம்-நன்றியுடையது--பொதுப் பாளர்.

### நெல்லை நகர தி. மு. கழக பொதுக் கூட்டம்

17—4—54 இரவு 8 மணிக்கு திரு வி. க. திடலில் தி மு கழகச் சார்பில் ஓர் பொதுக் கூட்டம் தோழர் ச. வீரபாகு தலைமையில் நடைபெற்றது. தலைவர் பேச்சுக்குப் பின், தோழர் கந்தசாமி பேசினார். பின்னர் தோழர் நெல்லை-வில்லாளன் தற்கால அரசியல் நிலை, திராவிட நாடு பிரிய வேண்டிய அவசியத்தையும், பிரெஞ்சிந்திய விடுதலை ஆகியவை குறித்து விரிவுரையாற்றினார். பின்னர், சுகாதாரத்திற்குக்கேடு தரும் தெப்பக்குளத்தை இவ்வாண்டு கோடையில் சுத்தம் செய்ய வேண்டுமென்று நகராண்மைக் கழகத்தினரை கேட்டுக் கொண்டு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### சென்னை 34-வது வட்ட தி. மு. கழகம்

21—4—54 இரவு 7 மணிக்கு மேல் நுங்கம்பாக்கம் 34-வது வட்டம் தி மு கிளைக் கழக செயற் குழு தோழர் வ. சங்கரநாராயணன் தலைமையில் நடைபெற்றபோது, தமிழ்நாடு உழைப்பாளர் கட்சியின் போக்கு பற்றி வருத்தம் தெரிவிக்கப்பட்டது.

### விளாம்பட்டி தி. மு. க.

18—4—54ல் நடைபெற்ற செயற்குழுகூட்டத்தில், தோழர்கள் எம். என். ராய், என். ஆர். சாமியப்பா, வி. வி. தனுஷ்கோடி, கு ஆ முத்து, விளாம்பட்டி இ. கிருட்டிணசாமி ஆகியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்பட்டது.

### சமூதாய நலத் திட்டம்

மாணவர்கள் பங்கு கோள்வர்

சென்னை, ஏப். 26—

சென்னைக் கல்லூரிகள், பள்ளிக் கூடங்களைச் சேர்ந்த 1500 மாணவர்கள் மண்வெட்டிகள், கூடைகளுடன் மே மாதத்தில் செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள கிராமங்களுக்குச்சென்று கோடை விடுமுறையின்போது 3 வாரங்கள் தங்கி புது ரோடு போடும் வேலையும், குளங்கள் செப்பனிடும் திட்டங்களையும் மேற்கொள்ளுவார்கள்.

# சட்டம் இயற்றுவதால் சங்கடங்கள் தீராது!

—— ( ; ) ——

## கால மாறுதலை அனுசரிக்கும்படி இந்திய உதவி மந்திரி கோருகிறார்!

கோவை, ஏப். 25—

"தொழிலாளர் பிரச்னைகளை மனித வளர்ச்சி அம்சங்களுடன் அணுகும்படியும், கால மாறுதலுக்குத் தகுந்தபடி நடந்துகொள்ளும்படியும், நிர்வாகிகளைக் கேட்டுக் கொள்ளுகிறேன்; எப்பொழுதுமே தகராறு நடைபெறும்படியாக தொழிலாளர்களை முதலாளிகள் ஆத்திரமூட்டாதிருக்க வேண்டும்," எனறு, மத்திய சர்க்கார் தொழிலாளர் உதவி மந்திரி அபீத் அலி, அ இ பஞ்சாலைத் தொழிலாளர் மாநாட்டை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் தெரிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:- "தொழிலாளர்களை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளைச் சட்டம் இயற்றுவதின் மூலம் மட்டும் தீர்த்துவைத்துவிட முடியாது; தொழிலாளர்—தொழிலதிபர்கள் சமரச முயற்சியின் மூலமேயே இப்பிரச்சினைகள் தீர்க்கப்படுவது சிறந்த வழியாகும்."

திறன் அதிகரிப்பு பற்றி குறிப்பிடுகையில் அவர் கூறியதாவது:-

"இதனுல் கூடியவரை யந்திர விஸ்தரிப்பு என்று அர்த்தமாகும். நாட்டில் இன்றையப் பொருளாதார நிலையில் எவ்வளவு தூரம் இது சாத்தியமானது என்பது குறித்து திட்டக் கமிஷன் பரிசீலனை செய்து வருகிறது; மனிதனது சுபீட்சம் என்ற கண்ணோட்டத்துடன் இப்பிரச்னையைக் கவனிக்க வேண்டும்; உழைக்கும் மனிதனது க்ஷேமலாபத்தைத் தியாகம் செய்து தொழில் நுணுக்க அபிவிருத்தியினால் என்ன பிரயோசனம் என்பது பற்றி சிந்திக்க வேண்டும்."

"தொழிற்சங்கங்கள் தொழிலதிபர்களுடன் போராடுவதிலேயே தங்கள் சக்தியையும் காலத்தையும் செலவிடாமல் தங்களுடைய தார்மீக அந்தஸ்தை உயர்த்துவதில் முயற்சி எடுக்க வேண்டும்."

திராவிட முன்னேற்றக் கழகத் அக்ஷர தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று (24, குறிப்பு நாராயண செட்டித் தெரு, ராயபுரம்) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: பி. என், அண்ணாதுரை, எம். ஏ.,

மே விழாவன்று மகத்தான விருந்து!

சிந்தனையைத் தூண்டிவிடும் சிறந்த கட்டுரைகள், கதைகள், கவிதைகள்! அறிஞர் அண்ணா. மற்றும் மறுமலர்ச்சி எழுத்தாளர்களின் எண்ணக் குவியல்!

இவ்வித சிறந்த அமைப்புகளுடன்

"திராவிடன்" மே தின மலர்

30—4—54-ம் நாளன்றே வெளிவருகிறது

மூவண்ண முகப்பு ★ ஏராளமான படங்கள் ★ விலை 8 அணா

எல்லோரும் படித்துணர வேண்டிய சிறப்பு மலர்! இது ஓர் கருத்துக் களஞ்சியம்! குடும்ப விளக்கு!

எல்லா ஊர்களிலும் 'திராவிடன்' விற்பனையாளர்களிடம் மலருக்கு உடனே முந்துங்கள் விற்பனையாளர் இல்லாத ஊர்களுக்கு மட்டும் முன்பணம் கட்டக்கூடிய ஏஜெண்டுகள் தேவை

விவரங்களுக்கு: 'திராவிடன்' அலுவலகம், 16, ரிலையன்ஸ் ரைஸ் மில் தெரு சென்னை—1.

